2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம்.

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 12 மதுரை 13—10—74 ஞாயிறு மலர் 238

## பாகிஸ்தான் அடக்குமுறை போராடும் டாக்டர்கள் கைது

கராச்சி, அக். 10—

சம்பள உயர்வு முதலிய கோரிக்கைகளை வற்புறுத்தி வரும் டாக்டர்களை, பாகிஸ்தான் அரசு கைது செய்து வருகிறது. இதுவரை 22 பேரைக் கைதுசெய்து சிறையில் அடைத்துள்ளது மேலும் பலரைக் கைது செய்ய அரசு திட்டமிட்டுள்ளது.

6 ஆயிரத்துக்கு மேற்பட்ட இளம் டாக்டர்களின் சம்பள உயர்வு கோரிக்கை குறித்து பேச்சுவார்த்தை நடத்த அரசு மறுத்து வருவது — அவர்கள்மீது அடக்குமுறையை ஏவி வருகிறது.

## ஐரோப்பிய பொது மார்க்கெட்டிடமும் இந்தியா கையேந்துகிறது

புதுடெல்லி, அக். 11—

பெரும் ஐரோப்பிய முதலாளித்துவ நாடுகளின் அமைப்பான ஐரோப்பிய பொதுமார்க்கெட்டிடம் இந்திய அரசு ரூ. 80 கோடிக்கு உணவு தானிய உதவி கேட்டுள்ளது. 'ஐரோப்பிய பொதுமார்க்கெட்டும் உணவுப் பிச்சையிடுவதாக அறிவித்துள்ளது. ஏற்கனவே இந்திய அரசு அமெரிக்காவிடமும், சோவியத்திடமும் உணவுக்காக கையேந்தி நிற்கிறது.

சொந்த நாட்டில் விளையும் தானியங்களை நிலப்பிரபுகளிடமும், பதுக்கல் பேர்வழிகளிடமும்விட்டு, விட்டு வெளிநாடுகளிடம் தொண்ணூந்து நிற்கிறது இந்திய அரசு!

# மார்க்சிய ஒளிதான் மனித சமூக விமோசனத்துக்கு வழிகாட்டி

## சட்டத்தின் மூலம் சோறு கிடைக்காது; சோஷலிஸம் வராது

# இந்திய-சீன நட்புறவு வேண்டும்

## சீனப்புரட்சியின் வெள்ளி விழாவில் தோழர் பி. ராமமூர்த்தி முழக்கம்

சென்னை, அக். 12—

"உலகமக்களின் விமோசனத்துக்கு வழிகாட்டும் ஒரே தத்துவம் மார்க்சீய தத்துவம்தான். அதை உணர்ந்து திறமையாகப் பயன்படுத்தியதுதான் மக்கள் சீனத்தின் மாபெரும் வெற்றிகளுக்குக் காரணமாகும்" என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ உறுப்பினர் தோழர் பி. ராமமூர்த்தி, பலத்த கைதட்டலுக்கிடையே முழங்கினார்.

சீனப்புரட்சியின் 25-வது ஆண்டு வெள்ளி விழா சென்னை கோகலே மண்டபத்தில், 10—10—74-ந் தேதி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் கொண்டாடப்பட்டது.

இக்கூட்டத்திற்கு கட்சியின் சென்னை—செங்கை மாவட்டக்குழு செயலாளர் தோழர் பி ஆர் பரமேஸ்வரன் தலைமை வகித்தார்.

நானிலமே வியந்து பாராட்டும் வண்ணம் மக்கள் சீனம் சாதித்த சாதனைகளைப் பற்றியும் முதலாளித்துவ உலகின் நெருக்கடிகளைப் பற்றியும் இக்கூட்டத்தில் தோழர்கள் பி ராமமூர்த்தி, சமர் முகர்ஜி எம் பி, வி பி சிந்தன் ஆகியோர் விளக்கமாகப் பேசினார்கள்.

### பி. ராமமூர்த்தி உரை

தோழர் பி ஆர் பேச்சின் விபரமாவது

"'கம்யூனிஸ்டுகள் என்றாலே, மாஸ்கோவில் மழை பெய்தால் மதுரையில் குடை பிடிப்பவர்கள்' என்று ஒரு காலத்தில் நம்மைக் கிண்டல் செய்வார்கள். இன்று பீகிங்கில் மழைபெய்தால் சென்னையில் குடைபிடிப்பவர்கள் என்று நமது கட்சியைப்பற்றி கூறுகிறார்கள்.

ஆனால் நாம் எந்த நாட்டுக்கும் ஜால்ரா அடிக்கவில்லை.

இன்று சீனப் புரட்சியின் வெள்ளி விழாவை நாம் ஏன் கொண்டாடுகிறோம்? சீனாவின் வெற்றி, தொழிலாளி வர்க்கத்தின் வெற்றியாகும். முதலாளித்துவத்திற்கும் நிலப்பிரபுத்துவத்திற்கும் மரண அடி கொடுத்து சோஷலிசத்தின் வெற்றியை நிரூபித்துக் காட்டுவதால் தான் சீனப்புரட்சியைக் கொண்டாடுகிறோம்.

நமது முதல் ஐந்தாண்டுத் திட்டத்திற்காக, அமெரிக்கா, பிரிட்டன் முதலான நாடுகளிடம் இந்திய அரசு கடன் கேட்டபோது, ஆசியாவில் சீனாவுக்கு எதிரான ஒரு பெரும் சக்தியாக இந்தியா வரும்; கம்யூனிஸமா? ஜனநாயகமா?—என்றால் ஜனநாயகம் தான் என்று நிரூபிக்க முடியும், அந்த அளவுக்கு இந்தியா முன்னேறும் என்று நம்பித்தான் இந்தியாவுக்குக் கடன் கொடுத்தார்கள்.

### 1929-ம் வருடத்திய நெருக்கடிபோல் இன்று

ஆனால் இன்றைய நிலைமை என்ன? முதலாளித்துவ நாடுகளில், பொருளாதார நெருக்கடி முற்றிவிட்டது. 1929-ம் வருடத்திய நெருக்கடி போல் ஏற்பட்டிருக்கிறது. அதற்கு முன்னோடியாக அன்று பணவீக்கமும், பாங்கிகள் திவாலாவதும் வரிசையாக நிகழ்ந்தன. இப்போதும் அதே நிலைமைதான் ஏற்பட்டுள்ளது. அமெரிக்கா, பிரான்ஸ், ஜெர்மனி ஆகிய நாடுகளின் பேங்குகள் திவாலாகி வருகின்றன.

1929-ல் முதலாளித்துவ நாடுகளில் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டபோது சோசலிச சோவியத் யூனியன் மட்டும் ஜாம் ஜாமென்று முன்னேறியது.

அதே போல், இன்று இந்தியா உட்பட முதலாளித்துவ நாடுகளெல்லாம் உற்பத்தி மந்தம், பணவீக்கத்தால் பாதிக்கப்பட்டுத் தத்தளிக்கும்போது, சீனாவும், சோவியத் யூனியனும் இதர சோசலிஸ்ட் நாடுகளும் ஜாம் ஜாமென்று முன்னேறுகின்றன.

### ஸ்டாலின் சொன்னார்

முதல் உலக யுத்தம் முடிந்தபின், இனி நெருக்கடியே வராது என்று முதலாளித்துவ நாடுகள் கூறின.

ஆனால், தோழர் ஸ்டாலின் மட்டும் 'நெருக்கடி வரும்' என்று கூறினார். அவரை கிண்டல் செய்தார்கள்.

ஆனால், 10 ஆண்டுகளில் முதலாளித்துவ நாடுகளில் பெரும் நெருக்கடி வந்தது. முதலாளித்துவ நாடுகளான அமெரிக்காவும் பிரிட்டனும் ஜெர்மனும் பிரான்சும் அதில் சிக்கிச் சீரழிந்தன.

ஸ்டாலின் கூறியது மெய்யாயிற்று காரணம், அவர் கூறியது மார்க்சியத்தின அடிப்படையில்தான். அது பொய்க்குமா? மார்க்சிய, லெனினிசம்தான் மக்களுக்கு வழிகாட்டும் தத்துவம் அந்த இஸத்தை வெல்ல, இனி எந்த இஸத்தாலும் முடியாது மார்க்சிஸத்தை சீனாவின் சூழ்நிலைமைகளுக்கு ஏற்ப அமலாக்கியதுதான் சீனாவின் வளர்ச்சிக்கும் எழுச்சிக்கும் காரணம் உலக மக்களின் விமோசனத்துக்கு வழிகாட்டும் ஒரே தத்துவம், மார்க்சிஸம் தான் என்பது.

### சோஷலிஸம் வந்தது சட்டத்தின் மூலம் அல்ல

சீனா மக்களை நம்பியது. சீனாவில் நிலச்சீர்திருத்தம், சட்டத்தின் மூலம் ஏற்படவில்லை நிலத்தை விவசாயிகள் தாமாகவே எடுத்துக் கொண்டார்கள். அதை அரசு சட்டபூர்வமாக்கியது. வர்க்க ஸ்தாபனங்களை வளர்த்து, அதன் மூலம் லட்சியங்களை நிறைவேற்றினர். சுரண்டல் சக்திகளை தகர்த்தெறிய பலம் வாய்ந்த வர்க்க ஸ்தாபனங்களை கட்டி வளர்த்தனர்.

இந்தியா யாரை நம்பியது? மக்களையா? அல்ல. பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் ஐ சி எஸ் அதிகாரிகளை நம்பினார்கள் என்றால், காங்கிரஸ் ஆட்சியாளர்கள் ஐ ஏ எஸ் அதிகாரிகளை நம்பினார்கள். மாறுதல் இல்லை.

ஆகவே, மாற்றம் ஏற்படச் செய்ய வேண்டுமானால், அது பிரம்மாண்டமான



போராட்டத்தின் மூலமே சாத்தியமாகும்' உலக வரலாறு அனைத்தும் வர்க்கப் போராட்டங்களின் வரலாறே ஆகும்.

### அமெரிக்கச் சதி

இத்தனைக்கும் சீனா எளிதில் முன்னேறிவிடவில்லை, கம்யூனிச சீனா பிறக்கவே கூடாது என்று அமெரிக்க ஏகாதிபத்தியம் ஆனவரை முயன்றது பிறந்த பிறகு பொருளாதார முற்றுகையிட்டுத் தோற்றது.

இன்று இந்தியா பல்லாயிரம் கோடி ரூபாய் வெளி நாடுகளில் கடன் வாங்கியிருக்கிறது. இருந்தும், வறுமை, பட்டினி, வேலையின்மைதான் தாண்டவமாடுகிறது.

சீனாவோ எந்த நாட்டுக்கும் சல்லிக்காசுகூட கடன்படவில்லை, அங்கு வறுமை இல்லை. நாணயத்தின் மதிப்பு ஒரு சிறிதும் குறையவில்லை.

### துரதிர்ஷ்டம்

இன்று ஆப்பிரிக்க நாடுகளில் தேச விடுதலைப் போர் வெற்றிகரமாக நடக்கிறது. போர்த்துக்கீசிய ஏகாதிபத்தியம் சரிந்து விழுகிறது.

ஆனால் துரதிர்ஷ்டவசமாக கம்யூனிச உலகம்—சீனாவும் ரஷ்யாவும் பிரிந்து எதிரெதிராக நிற்கின்றன. இவை ஒன்றுசேர வேண்டுமென்பது தான் நமது விருப்பம்.

### இந்திய-சீன உறவுவேண்டும்

அது மட்டுமல்ல. இந்த உலகில் மூன்றில் ஒரு பகுதி மக்களைக் கொண்ட இந்தியாவும், சீனாவும்—பகைமையை மறந்து—பிரச்னைகளைப் பேசித் தீர்த்துக்கொண்டு—நெருங்கி வந்தால். ஏகாதிபத்தியத்தின் மீது இடிவிழும் என்கிறோம் நாம்.

இன்று ஆட்சியாளர்கள் சீனாவுடன் பேசலாம் என்கிறார்கள். இதைச் சொன்னதற்காகத்தான் 1962-லும், 1964லும் எங்களை தேசத்துரோகிகள் என்று கூறி கடலூர் சிறையில் அடைத்தார்கள்"—என்றார் ராமமூர்த்தி.

### சீனக் கண்காட்சி

மாணவர் சங்கத் தோழர்கள் சீனாவின் வளர்ச்சியைச் சித்தரிக்கும் புகைப்படங்களையும் புள்ளி விவரங்களையும் கண்காட்சியில் வைத்தனர்.

தோழர் வி பி சிந்தன், சமர் முகர்ஜி பேச்சு அடுத்து வெளிவரும்.

## மதுரையில் படி அரிசி ரூ. 6-75

மதுரை, அக். 11—

தமிழகத்தில் அரிசி மிகவும் அதிக விலையில் விற்கப்படுகிறது. குறுவை அறுவடை முடிந்த பிற்பாடு அரிசி விலை குறைந்து விடுமென்று தமிழக தி.மு.க. அரசு தம்பட்டமடித்தது,

ஆனால்விலையோ குறைந்த பாடில்லை. மதுரையில் படி அரிசி ரூ. 6-75, சென்னை ரூ. 7-25, தூத்துக்குடி ரூ. 7-00. திருச்சியில் படி அரிசி ரூ. 6-25,

இதே நிலை தான் தமிழகத்தின் எல்லா இடங்களிலும் நீடிக்கிறது. அரிசி விலை உயர்ந்த வண்ணமாகவே உள்ளது,

## தமிழகத்தில் பி.டி. ரணதிவே சுற்றுப்பயணம்



மதுரை. அக். 11—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல்தலைமை குழு உறுப்பினரும், இந்திய தொழிற்சங்க மையத்தின் (சி ஐ டி யூ) தலைவருமான தோழர் பி டி ரணதிவே, தமிழகத்தில் 5 நாட்கள் சுற்றுப் பயணம் மேற்கொள்கிறார்.

வருகிற 17ந்தேதி கோவையிலும், 18ந்தேதி திருச்சியிலும், 19ந்தேதி நெய்வேலியிலும், 20ந்தேதி மதுரையிலும் 21ந் தேதி சென்னையிலும் நடக்கும் கட்சிப்பொதுக் கூட்டங்களிலும் மற்றும் பல நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்கிறார்.

## இரயில்வே தொழிலாளர் வேலை நீக்கம் செல்லாது

### ஆந்திர ஹைகோர்ட் தீர்ப்பு

ஹைதராபாத், அக். 9—

கடந்த மே மாதம் நடைபெற்ற ரயில்வே தொழிலாளர் ஸ்டிரைக்கில் பங்கு கொண்டதற்காக சதர்ன் ரயில்வே தொழிலாளர் 500 பேரை வேலை நீக்கம் செய்தது செல்லுபடியாகாது என ஆந்திரப் பிரதேச ஹைகோர்ட் தீர்ப்பளித்தது.

கடைசியில் வேலைக்குவந்தவர்கள் முதலில் செல்ல வேண்டும் என்ற கொள்கையை கடைப் பிடிக்காமலும் வேலை நீக்க நஷ்டஈடு கொடுக்காமலும், 500 காஷுவல் தொழிலாளர்களை வேலைநீக்கம் செய்ததன் மூலம் தொழிற் தகராறு சட்டத்தை ரயில்வே நிர்வாகம் மீறிவிட்டது என்று 500 தொழிலாளர்களும் ஆந்திர ஹைகோர்ட்டில் வழக்கு தொடுத்தனர்.

இம்மனுவை ஏற்றுக் கொண்டு. ரயில்வே நிர்வாகத்தின் வாக்கு மூலத்தையும், ரயில்வே அமைச்சரின் அறிக்கையையும் ஆராய்ந்து தீர்ப்புக்கூறிய நீதிபதி அல்லாடி குப்புசாமி தனது தீர்ப்பில் அமைச்சரின் அழைப்பின்படி வேலையில் கலந்து கொள்ளாததற்காகவே அத்தொழிலாளர்கள் 500 பேரும் வேலை நீக்கம் செய்யப்பட்டுள்ளனர் என்றும் இவ் வேலை நீக்கம் அரசியல் சட்டத்தின் 14-வது 16-வது பிரிவுகளை மீறுவதாகும் என்றும் அவர் தீர்ப்பளித்தார்.

## கட்சி உறுப்பினராகவே சாக விரும்பிய கன்ஹயலால் மகேந்திரா

முதுபெரும் சுதந்திரப் போராட்ட வீரரும், மார்க்சிஸ்ட் கட்சி உறுப்பினரும், வழக்கறிஞருமான தோழர் கன்ஹயலால் மகேந்திரா கடந்த 14—7—74ந் தேதி காலமானார்.

இவர் 1898 டிசம்பர் 9-ந் தேதி பிறந்தார். வழக்கறிஞரான இவர், இளம் வயதிலேயே சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டார். காங்கிரஸ் சோசலிஸ்ட் கட்சியிலும் பின்னர் சோசலிஸ்ட் கட்சியிலும் இருந்து செயல்பட்ட இவர், தனது 55வது வயதில் ஒன்றுபட்ட இருந்த கம்யூனிஸ்ட் கட்சியிலும் பின்னர் மார்க்சிஸ்ட் கட்சியிலும் ஈடுபாடு கொண்டார்.

இவர் இறப்பதற்கு ஒரு மாத காலத்துக்கு முன்பு இவரைப் பார்க்க வந்த தோழர் சிவவர்மாவிடம் "தோழரே, நான் உடல்நலம் குன்றியுள்ளேன்; ஆதலால் கட்சிப் பணி எதுவும் புரிய முடியாது உள்ளேன், ஆனால் நான், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஓர் உறுப்பினராக இருந்து சாக விரும்புகிறேன். கட்சி எனக்கு உறுப்பினர் தகுதி அளிக்குமா?" என்று கேட்டார்.

அவருக்கு உறுப்பினர் தகுதி அளிப்பது என கட்சியின் உத்திரப்பிரதேச மாநில செயற்குழுவும் முடிவெடுத்தது. ஆனால் அந்த முடிவு அவருக்குத் தெரிவிக்கும் முன்னரே, அவரைமரணம் ஆட்கொண்டது.

தோழர் மகேந்திராவின் மறைவுக்கு உ.பி மாநிலக் குழுவும், அப்பகுதியைச் சேர்ந்த ஆயிரமாயிரம் மக்களும் அஞ்சலி செலுத்தினர்.

பொதுச் செயலாளர் தோழர் பி சுந்தரய்யா மகேந்திராவின் மகன் தோழர் மதன்மகேந்திராவுக்கு அனுதாபச் செய்தி ஒன்று அனுப்பினார்.

## பொலிட்பீரோ கூட்டம்

திருவனந்தபுரம், அக். 11—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக் குழு [பொலிட் பீரோ] கூட்டம், இன்று (வெள்ளி) முதல் 5 நாட்கள், இங்கிருந்து 40 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள நெய்யாரில் நடைபெறுகிறது.

### மத்திய கிசான் கவுன்சில்

அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் மத்திய நிர்வாகக்குழுக் கூட்டம் வருகிற 17-ந் தேதி முதல் 20-ந் தேதி முடிய நெய்யாரில் நடக்கிறது.

"போலீஸ் ராஜ்யத்துக்கு முடிவு கட்டுவோம்"

## கேரள சட்டமன்றத்திற்குள் எதிர்க்கட்சி உறுப்பினர்கள் ஆர்ப்பரிப்பு

### கூட்டம் ஒத்திவைக்கப்பட்டது

திருவனந்தபுரம், அக். 11—

கேரள சட்டமன்றம் நேற்று [அக். 10] மீண்டும் கூடியபோது, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்களும், மற்று 64 எதிர்க்கட்சி உறுப்பினர்களும் கேரள அரசின் மீது தொடர்ந்து சரமாரியாக—"போலீஸ் ஆட்சி ஒழிக!" என்றும், "போலீஸ் ஆட்சிக்கு முடிவு கட்டுவோம்" என்றும கண்டனக் கணைகள் தொடுத்து ஆர்ப்பரித்தனர். இதைத் தொடர்ந்து, சபாநாயகர் மொய்தீன்குட்டி ஹாஜி, கூட்டத்தை ஒத்திவைத்துவிட்டு மறுநாள் கூடுவதாக அறிவித்தார்.

சட்டமன்ற இலாகா காவல் துறைக்கு அதிக ஆட்களைச் சேர்த்துக் கொள்வதைக கைவிட வேண்டுமென்றும், சபாநாயகரின் மேடைமுன் நிறுத்தப்பட்டுள்ள காவலர்களை வாபஸ் பெற வேண்டுமென்றும் எதிர்க்கட்சியினர் குரல் எழுப்பினர்.

தோழர் இ எம் எஸ் நம்பூதிரிபாட் போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்தும்—மக்களின் நம்பிக்கையை இழந்துவிட்ட மந்திரிசபை ராஜிநாமா செய்ய வேண்டுமென்றும் கோரினார்.

மார்க்சிஸ்ட் உறுப்பினர் தோழர் சி பி சி வாரியர் பேசுகையில், காட்டிலாகா சொத்துக்களை கொள்ளையடித்த மந்திரி அடியோடியை விரட்டியடிக்க வேண்டும் என்றும்—கள்ள நோட்டு அடிப்பவர்களின் கூட்டாளியான மந்திரி பேபிஜானையும் விரட்ட வேண்டுமென்றும் வற்புறுத்தினர்.

எதிர்க் கட்சியினரின் கண்டனக்குரல்கள் ஓங்கி எழவே, அவர்களை அமைதிப்படுத்த சபாநாயகர் முயன்றார். ஆனால் ஓயவில்லை, எனவே, சபாநாயகர் அரை மணி நேரம் சபையை ஒத்தி வைத்தார். மீண்டும் சபை கூடியபோது, எதிர்க்கட்சியினர் இடைமறித்து தொடர்ந்து கண்டனக் குரல்கள் எழுப்பினர். இதைத் தொடர்ந்து சபாநாயகர் கூட்டத்தைக் கலைத்து விட்டார்.

### எதிர்க் கட்சித் தலைவர்களின் கண்டிப்பான கோரிக்கை

சட்டமன்றத்திலிருந்து "கோட்டை ஜன்களை" (காவலர்களை) விலக்கிக் கொள்ள வேண்டும் என்றும் ஊழல் புரிந்த நிதி மந்திரி அடியோடி ராஜிநாமா செய்ய வேண்டுமென்றும், அவர்கள் மீது கூறப்பட்ட புகார்களை பிரசுரித்த பத்திரிகையி

(2-ம் பக்கம் பார்க்க).

# தீக்கதிர்

## குல்லாய் மாற்றமே தவிர, கொள்கை மாற்றம் இல்லை

பிரதமர் இந்திரா காந்தி, தனது மந்திரிசபையில் பல்வேறு மாறுதல்களைச் செய்திருக்கிறார்.

மந்திரிசபையின் அரசியல் விவகாரக் குழுவில் அங்கம் வைத்திருந்த பாதுகாப்பு மந்திரி ஜகஜீவன்ராம், விவசாய, நீர்ப்பாசன மந்திரி ஆனார். நிதி மந்திரியாக இருந்து வந்த ஒய். பி. சவாண், வெளிவிவகார மந்திரி ஆனார். வெளிவிவகார மந்திரியாக இருந்து வந்த சுவரண்சிங், பாதுகாப்பு மந்திரி ஆனார். காங்கிரஸ் தலைவர் எஸ். டி. சர்மாவை போக்குவரத்து மந்திரியாக ஆக்கியிருக்கிறார்கள். பிரம்மானந்த ரெட்டி உள்துறை அமைச்சராகியுள்ளார்.

பக்ருதீன் அலி ஜனாதிபதியான பிறகு, அவர் வகித்து வந்த உணவு மந்திரி பதவியை நிர்வகித்து வந்த சி. சுப்ரமண்யம், இப்போது நிதிமந்திரி ஆகிவிட்டார்.

இந்த மாறுதலில் பழைய மந்திரிகளில் 6 பேர் விடப்பட்டிருக்கிறார்கள்; புதிதாக 8 பேர் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள்.

இந்த மாற்றமெல்லாம் எதற்காக என்று கேட்டதற்கு, இன்று நாட்டில் ஏற்பட்டுள்ள பொருளாதார நெருக்கடியை திறமையாகச் சமாளிப்பதற்காகத்தான் என்று புதுடெல்லி கூறுகிறது.

இன்று நாட்டில் ஏற்பட்டுள்ள நெருக்கடிகள் என்ன?

பணவீக்கம் அதிகரித்துக் கொண்டே போகிறது. விலைவாசிகளோ, தினமொரு விலையாக ஏறிக்கொண்டேயிருக்கின்றன. உணவு தானிய உற்பத்தியும், தொழில் உற்பத்தியும் திட்டமிட்ட குறிக்கோளை எட்டவில்லை. வடக்கே நாகாலாந்து முதல், தெற்கே கேரளம் வரை, பஞ்சமும் பட்டினிச்சாவும் தலைவிரித்துத்தாண்டவமாடுகின்றது.

ஏற்றுமதி குறைவாகவும் இறக்குமதி கூடுதலாகவும் இருப்பதால், நாடு மேலும் மேலும் கடனிலேயே மூழ்கிக் கொண்டிருக்கிறது.

கறுப்புப் பணப்போட்டிப் பொருளாதாரம் நாட்டுப் பொருளாதாரத்தை நாசமாக்கிக் கொண்டிருக்கிறது.

இவ்வாறு எத்தனையோ நெருக்கடிகள் நாட்டின் தொண்டைக்குழியை அறுத்துக் கொண்டிருக்கின்றன.

புதிதாக திருத்தியமைக்கப்பட்டுள்ள மந்திரிசபையினால், இந்த நெருக்கடிகளையெல்லாம் திறமையாகச் சமாளித்து விடமுடியுமா?

திறமையாகச் சமாளிப்பதற்கு என்று தான், 1971-ம் ஆண்டு இடைத் தேர்தலுக்குப் பிறகு—நாளது வரை—ஒன்றல இரண்டு அல்ல 7 தடவைகளில் மந்திரிசபையை திருத்தியமைத்திருக்கிறார் இந்திராகாந்தி.

7 தடவை மாறுதல் ஏற்பட்டும் கூட, நாட்டின் நெருக்கடிகளில்—எந்தவொரு நெருக்கடியையாவது தீர்த்து வைத்தார்களா?

நாட்டு மக்களை கவலை நரகிலும் கடும்துன்பச் சுழலிலும் மாட்டிவிட்ட விலைவாசி ஏற்றத்தை—ஒரு நயாபைசாவாவது—இந்திராகாந்தி ஆட்சியில் மட்டுமல்ல, அவரது தந்தை ஜவஹர்லால் நேரு ஆட்சியிலும், இடையில் வந்து போன சாஸ்திரி ஆட்சியிலும்—குறைக்க முடிந்ததா?

அதுபோல் வேலையில்லாத திண்டாட்டம் பெருகுவதைத் தடுக்க முடிந்ததா? நாட்டைத் தன்னிறைவு பெறச் செய்ய முடிந்ததா? வெளிநாடுகளில் கடன், கடன் என்று கப்பரை தூக்குவதை நிறுத்த முடிந்ததா?

ஒன்றுமே இல்லை. ஒன்றுமே இல்லை என்பது மட்டுமல்ல, நாளுக்கு நாள், நிமிஷத்துக்கு நிமிஷம் நெருக்கடியின் விஷம நெறி கட்டி ஏறிக் கொண்டிருக்கிறது.

இந்த லட்சணத்தில், "வால்போச்சு, கத்தி வந்தது டும் டும்!" கதைதான நடக்கிறது. அதுபோய் இதுவாக, இதுபோய் அதுவாக, எது போய் எது வந்தும், யாருக்கு என்ன பலன்?

சவாண் குல்லாயை சுப்ரமண்யம் மாட்டிக் கொண்டால் என்ன? சுவரண்சிங் குல்லாயை ஜகஜீவன்ராம் மாட்டிக் கொண்டால் என்ன?

குல்லாய் மாற்று வேலைதான் நடக்கின்றதே தவிர, கொள்கை மாற்றம் ஏதுமில்லை.

ஏகபோக டாட்டா, பிர்லாக்களுக்கும், நிலப்பிரபுக்களுக்கும் நாட்டை வேட்டைக்காடாக்கி வரும் 27 ஆண்டு காங்கிரஸ் கொள்கையில், ஏதேனும் மாற்றம் உண்டா?

---

### ஆர்ப்பரிப்பு......

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

மீது தொடரப்பட்டுள்ள வழக்கை வாபஸ் பெற வேண்டுமென்றும் 4 சட்டமன்ற உறுப்பினர்களை அடித்த போலீஸ் அதிகாரிகளை சஸ்பெண்ட் செய்வதுடன் அவர்கள் மீது நீதி விசாரணை நடத்தப்பட வேண்டுமென்றும் எதிர்க்கட்சித் தலைவர்கள் நிருபர்களிடம் கூறினர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் இ எம் எஸ் நம்பூதிபாட், சோசலிஸ்ட் கட்சித் தலைவர் கே ஏ சிவராம பாரதி, கேரள சோசலிஸ்ட் கட்சி தலைவர் ஜான் மஞ்சூரன், கர்ஷகத் தொழிலாளர் கட்சித்தலைவர் பி வெலிங்டன், கேரள காங்கிரஸ் தலைவர் கே எம் ஜார்ஜ் ஆகிய எதிர்க்கட்சி தலைவர்கள் நிருபர்களுக்குப் பேட்டியளித்தனர்.

நிருபர்களுக்குப் பேட்டியளித்ததற்கு முன், எதிர்க்கட்சித் தலைவர்கள், சபாநாயகரைச் சந்தித்து தங்களது கோரிக்கைகளை தெரிவித்தனர். தங்களது கோரிக்கைகளை ஏற்றுக்கொண்டாலன்றி, சட்டமன்றப் பணிகள் சுமுகமாக நடக்க தங்களது ஒத்துழைப்பை எதிர்பார்க்கவேண்டாம் என்று அவர்கள் கூறினர்.

சபாநாயகர் விடுத்த அழைப்பிற்கிணங்கவே தாங்கள் சபாநாயகரைச் சந்தித்து பேசியதாக அவர்கள் கூறினர். முன்னதாக, அமைச்சர்களையும் இந்தக் கூட்டத்திற்கு அழைத்திருந்ததால் தாங்கள் கலந்து கொள்ளவில்லை என்றும் பின்னர் தங்களது கோரிக்கையை சபாநாயகர் மதித்து தங்களைத் தனியாக அழைத்து சந்தித்துப் பேசியதாகவும் எதிர்க்கட்சித் தலைவர்கள் தெரிவித்தனர்.

எம் வி ராகவன், சிவராம பாரதி, தாளவாடி உம்மன், பி குன்ஹன் ஆகிய 4 சட்டமன்ற உறுப்பினர்களையும் நடுத்தெருவில் வைத்து போலீஸ்காரர்கள் அடித்தனர். இந்த நிலையினால் அரசாங்கத்தைக் கண்டிப்பவர்கள் சட்டமன்றத்திற்குள்ளும் அடிபட்டவர்கள் என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது என்றும் எதிர்க் கட்சித் தலைவர்கள் கேட்டனர்.

போலீஸ்காரர்களைக் கொண்டு எதிர்க்கட்சியினரை மிரட்டுவது ஜனநாயகத்தின் ஆணிவேரையே வெட்டுவதாகும் என்றும், இது சட்டமன்ற உறுப்பினர்களின் கண்ணியத்திற்கு இழுக்கு ஏற்படுத்துவதாகும் என்றும் அவர்கள் கூறினர்.

---

## நிலப்பிரபுக்களை திரையிட்டு மறைக்க
# கருணாநிதி அரசின் கபட திட்டம்

சென்னை, அக். 11—

சிறுவிவசாயிகள் திட்டம் என்னுமொரு திட்டத்தை தமிழக அரசு அமுல் நடத்தப்போகிறதாம். அதற்கான திட்டமொன்றை அரசு வெளியிட்டுள்ளது.

அத்திட்டத்தின்படி ஒவ்வொரு மாவட்டத்திற்கும 50 ஆயிரம் பேர் வீதம் 7 மாவட்ட சிறு விவசாயிகளுக்கு உதவி செய்யப்படுமாம்.

அம்மாவட்டங்கள் திருச்சி, புதுக்கோட்டை, நீலகிரி, செங்கல்பட்டு, தஞ்சாவூர், கோயம்புத்தூர், கன்னியாகுமரி, ஆகியவை.

ஒவ்வொரு மாவட்டத்திற்கும் 1 கோடியே 50 லட்சரூபாய் வீதம் ஒதுக்கப்படுமாம்.

தமிழக அரசின் இத்திட்டத்தை அமுல் நடத்தப் போவது சிறு விவசாயிகள் வளர்ச்சி ஏஜென்ஸி திட்டமாம்.

### விவசாயத் தொழிலாளர்கள்

தமிழ் நாட்டில் உள்ளசிறு நில விவசாயிகளின் எண்ணிக்கையோடு தமிழகஅரசின்திட்டப்படி உதவிபெறும் சிறு விவசாயிகளின் எண்ணிக்கை சமுத்திரத்தில் பெருங்காயம் கரைத்தகதை தான்.

இது ஒருபுறமிருக்க, நாட்டில் அவசர அவசியமாக மேற்கொள்ள வேண்டிய பிரச்னைகளை திசை திருப்பி விடவே இத்திட்டம்.

நாட்டில் லட்சக்கணக்கான விவசாயத் தொழிலாளிகள் உடலின் உழைப்புசக்தியை மிகக் குறைந்த விலைக்கு விற்று செத்துச் செத்து வாழ்கிறார்கள்.

மேலும் 2 ஏக்கருக்கும் குறைவான நிலத்தில் உழைப்பதோடு, தம் உழைப்புச்சக்தியை பணக்கார விவசாயிகளிடமும், நிலப்பிரபுக்களிடமும் விற்பனை செய்து வாழ்க்கையை சுமையாக்கிக் கொண்டுள்ளார்கள்.

### உண்மையான உணர்வா?

இவர்களுக்கெல்லாம் கூலி உயர்வு உத்திரவாதம் அளிக்க வேண்டும். நில முதலைகளிடம் நிலத்தை எடுத்து விவசாயக் கூலிகளுக்கும், ஏழை விவசாயிகளுக்கும் கொடுக்க வேண்டும் என்ற உணர்வு தமிழக அரசுக்கு இல்லை.

அது மட்டுமின்றி, இப்பிரச்சினைகளின் அவசியத் தன்மையை மழுங்கடிக்கவே கடலில் கரைசத பெருங்காயம் என்ற முறையில் சிறு விவசாயிகளுக்கு உதவி என்ற திட்டத்தை தமிழக அரசு வெளியிட்டுள்ளது.

உண்மையில் நிலப்பிரபுக்களின், நில முதலாளிகளின் லாபத்தையும், நிலத்தையும் பாதுகாக்கவே இந்தநடவடிக்கையேயன்றி சிறு விவசாயிகளுக்கு உதவ வேண்டும் என்ற உண்மையான உணர்வினால் அல்ல.

இதற்காகவேதான் அரசாங்க கஜானாவிலிருந்து 10½ கோடி ரூபாயை செலவழிக்கத் திட்டமிட்டுள்ளது கருணாநிதி அரசு. நிலப் பிரபுக்களை திரைக்குப் பின்னால் மறைக்கும் முயற்சி இது.

### மோசடித்தனமே

விவசாயத் தொழிலாளர்களின் அடிப்படைப் பிரச்சினைகளைத் தீர்க்க முன்வராத எந்த அரசும் சிறுவிவசாயிகளுக்கு உதவப்போவதாக கூறுவதெல்லாம் நிலப்பிரபுக்களையும், நில முதலாளிகளையும் காக்கும் மோசடித்தனமாகும்.

அதுமட்டுமல்ல. இத்திட்டம் அமுலுக்கு வந்தால் வேண்டாதவர்கள், வேண்டியவர்கள் என்ற அடிப்படையில்தான் அமுலாகும். அத்தோடு வஞ்சலாவண்யமும் தன் திருவிளையாட்ல்களை நடத்தும்.

---

### சுப்புலாபுரம்
## நெசவாளர் ஆர்ப்பாட்டம்

ஜக்கம்பட்டி, அக். 10—

இங்குள்ள நெசவாளர் கடந்த 4-ந் தேதி உணர்ச்சி மிக்க ஆர்ப்பாட்ட ஊர்வலம் ஒன்றை நடத்தினர், நெசவாளர் பாதுகாப்புச் சட்டம் கூலி உயர்வு, போனஸ், மலிவு விலையில அரிசிமுதலிய கோரிக்கைகளை வற்புறுத்தி இந்த ஆர்ப்பாட்டம் நடந்தது.

முடிவில் டி, சக்கிவேல் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் பி. கே. முத்துச்சாமி, மா, அண்ணாமலை, கோ. மணிவேல், ஏ. பால்ராஜ விநடராஜன், ப.சென்னயன் ஆகியோர் பேசினர்.

### திருவேங்கடம்

நெல்லை மாவட்டம் திருவேங்கடத்தில் கடந்த 5-ந் தேதி வாலிபர் முன்னணி சார்பில் நடந்த விலைவாசி உயர்வு எதிர்ப்புப் பொதுக் கூட்டத்துக்கு எஸ். ஆறுமுகச்சாமி தலைமை வகித்தார்.

தோழர்கள் சக்தி, எம். மாடசாமி (வாலிபர் முன்னணி] ஆர். எஸ், முப்பிடாதி(மார்க்சிஸ்ட்) பி கிருஷ்ணசாமி (சி ஐ டி யூ] ராஜாமணி (மின் ஊழியர் சங்கம்) சிறுகதை எழுத்தாளர் சொ. பொன்னுசாமி பேசினர்.

---

## ஆசிரியருக்கு...

# காவேரிமில் தொழிலாளர்களுக்கு அரிசி கொண்டு வர அனுமதி கிடைக்குமா?

ஐயா,

காவேரி மில் தொழிலாளர் கூட்டுறவு பண்டகசாலைக்கு கடந்த இருபத்தி நான்கு (24) ஆண்டு காலமாக திருச்சி, மணச்சநல்லூரிலிருந்து மாதம் 500 மூடை அரிசி வாங்கிக் கொண்டு வந்து தொழிலாளர்களுக்கு வினியோகம் செய்வது வழக்கம்.

திருச்சியிலிருந்து புதுக்கோட்டை பிரிந்து, புதுக்கோட்டை தனி மாவட்டம் ஆன பின்பும் அரிசி வாங்கி வரப்பட்டது. தற்போது திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவர் மணச்சநல்லூரிலிருந்து அரிசி வாங்கிக் கொண்டு, புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள காவேரி மில்லுக்கு கொண்டு போகக் கூடாதென தடை விதிக்கிறாராம்.

செப்டம்பர் 17—9—74-ல் புதுக்கோட்டை மாவட்டக் கலெக்டரை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உட்பட சர்வகட்சி பிரதிநிதிகள் சந்தித்து நிலைமையை விளக்கிய பின், திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவருக்கு கடிதம் தருகிறேன், அங்குபோய் அரிசி வாங்கிக் கொள்ளுங்கள் என்று கூறினாராம்.

அதன்படிகடிதம்கொண்டு போய்க்கொடுத்ததும் திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவர் மணணச்சநல்லூரிலிருந்து அரிசி வாங்க இன்னும் அனுமதி கிடைக்கவில்லை. இதனால் 1000 தொழிலாளர் குடும்பங்கள் அரிசி கிடைக்காமல் மிகவும் கஷ்டப்படுகின்றன.

எனவே தமிழக அரசு உடனடியாக திருச்சியிலிருந்து அரிசி வாங்கி வர அனுமதி தர வேணுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

இங்ஙனம்
டி. குருசாமி,
காவேரி மில்ஸ்,
காவேரிநகர்.

---

### வாகைக்குளத்தில் வீரக்கனல் நாடகம்

திருமங்கலம், அக். 11—

திருமங்கலம் தாலுகா சிந்துபட்டியை டுத்த வாகைகுளத்தில் பொங்கலன்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் "வீரக்கனல்" என்ற நாடகம் நடத்தப்பட்டது.

விவசாயிகளின் உரிமைப் போராட்டங்களையும் நிலப்பிரபுத்துவத்தின் கொடுமைகளையும், அரசினரின் அடக்குமுறைகளையும் சித்தரிக்கும் இந்த நாடகத்துக்கு, திருமங்கலம் — உசிலம்பட்டி தாலுகா மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் உ. ச, உலகப்பா தலைமை வகித்தார். தீக்கதிர் உதவி ஆசிரியர் தோழர் ஐ. மாயாண்டி பாரதி சொற்பொழிவாற்றினர். 5000க்கு மேற்பட்ட மக்கள் விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.

---

# "படி அரிசி ரூ. 2-க்கு கொடு!"
## திண்டுக்கல்லில் மாதர்கள் ஆர்ப்பாட்டம்

திண்டுக்கல், அக். 11—

படி அரிசி இரண்டு ரூபாய்க்கு வேண்டுமென்று கோரிஇங்குள்ள சப்-கலெக்டர் அலுவலகம், கூட்டுறவு பண்டகசாலை ஆகியவற்றின் முன்னர் மாதர்கள் ஆர்ப்பாட்டங்கள் நடத்தினர்.

ஜனநாயக மாதர் சங்கத்தின் சார்பில் நடந்த இந்த ஆர்ப்பாட்டத்தில் ஏராளமான மாதர்கள் கலந்து கொண்டனர்.

மாதர் சங்கத் தலைவர் எம் முனியம்மாள் தலைமையில் ஊர்வலமாகப் புறப்பட்டு விலைவாசி உயர்வை எதிர்த்தும் வாரத்துக்கு 5 கிலோ அரிசி கோரியும், கூட்டுறவு மொத்த விற்பனை, மற்றும் நியாய விலைக் கடைகளில் நடைபெறும் அளவு மோசடிகளைக் கண்டித்தும் கோஷ முழக்கங்களை எழுப்பிக் கொண்டு வந்து, முதலில் பண்டகசாலை முன்பு ஆர்ப்பாட்டம் நடத்தினர். மகஜர் ஒன்றும் அளிக்கப் பட்டது.

மகஜரைப் பெற்றுக் கொண்ட மானேஜர், உரிய நடவடிக்கை எடுப்பதாகவும் மேலும் சூபர்வைசர்களை நியமித்து கண்காணிப்பதாகவும் உறுதி கூறினர்.

பின்னர் ஊர்வலமாகப் புறப்பட்டு கலெக்டர்ஆபீஸ் முன் ஆர்ப்பாட்டம் நடத்தி 4 ஆயிரம் கையெழுத்துக்கள் அடங்கிய மகஜர்களை மாதர்சங்கச்செயலாளர் எம் தனலட்சுமியும்மற்ற தோழர்களும் சப்-கலெக்டரிடம் அளித்தனர்.

அவர் மகஜரை பெற்றுக் கொண்டு கோரிக்கைகளை அரசுக்குத் தெரிவிப்பதாக கூறினர்.

பின்னர் நடந்த கூட்டத்தில் எம் தனலட்சுமியும், தோழர் எம் வரதராஜனும் பேசினர்.

---

### சிம்சன் தொழிலாளர் அனைவரும் வேலைக்கு திரும்பினர்

சென்னை, அக். 10—

இரண்டரை ஆண்டுகளுக்கு முன்னர் நடந்த சென்னை சிம்சன் தொழிலாளர்களின் வீரம் செறிந்த போராட்டத்தினையொட்டி சஸ்பெண்ட் செய்யப்பட்ட அனைத்துத் தொழிலாளர்களுக்கும் மீண்டும் வேலை கிடைத்தது.

அப்போராட்டத்தையொட்டி 400 தொழிலாளர்களை சிம்சன் நிர்வாகம் சஸ்பெண்ட் செய்து பழிவாங்கியது, தொழிலாளர்களின் ஒன்றுபட்ட போராட்டத்தின் விளைவாக அந்த 400 பேருக்கும் சஸ்பெண்ட் காலத்திற்கு முழுச் சம்பளம் அளிக்கவும், அவர்கள் மீது நடைபெறும் விசாரணை முடிவை முதலமைச்சரின் முடிவுக்கு விடவும் ஒப்பந்தம் ஏற்பட்டது.

விசாரணை முடித்து 122 தொழிலாளர்களை வேலையைவிட்டு நீக்கிவிட்டதாக நிர்வாகம் அறிவித்தது. ஆனால் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு ஒரு தொழிலாளிகூட வேலையிழக்க விட மாட்டோம் என்று உறுதி கொண்டு சங்கத்தின் மூலம் கிளர்ச்சிக்குத் தயாராகினர்,

இதனால், அந்த 122பேரையும வேலைக்கு அனுமதிக்குமாறு முதலமைச்சர் உத்தரவிட்டார். செம்பியம் எஸ்டேட்டின வேலைக்குத்திரும்பியதொழிலாளர்களுக்கு மாலைகள், துண்டுகள் அணிவித்து விழாக்கோலமாக அழைத்துச் செல்லப்பட்டார்கள்.

---

# கேரள
## சட்டமன்றத்திற்கு முன் எழுச்சிமிகு ஆர்ப்பாட்டம்

திருவனந்தபுரம், அக்-11—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையிலான 5 எதிர்க் கட்சிகளைக் கொண்ட-கூட்டுப் போராட்டக்குழுவின் சார்பில்சென்ற 9-ந் தேதியன்று கேரள சட்டமன்றம் முன்னால் பெரும் வெள்ளம் போல் சூழ்ந்து பிரம்மாண்டமான ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டது.

இந்த ஆர்ப்பாட்டத்திற்கு தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாடும், மற்றும் பல தலைவர்களும் தலைமை வகித்தனர்.

"அடக்குமுறையும், ஊழலும் பெருகி விட்ட அச்சுதமேனன் அரசே, ராஜினாமா செய்" என்று சூழ்ந்திருந்த பல்லாயிரக்கணக்கான மக்கள் ஆர்ப்பரித்தனர்.

கேரள சட்டசபைக் கூட்டத் தொடர், பலத்த போலீஸ் காவலுடன் 9-ந் தேதியன்று துவங்கியது.

கூட்டத் தொடர் துவக்கத்தின் போது, சட்டமன்றத்திற்கு முன்னால் மாபெரும் ஆர்ப்பாட்டம் நடைபெறும் என்று கூட்டுப் போராட்டக்குழு அறிவித்தவுடனே, சட்டமன்றத்திற்கு அருகில் 8-ந் தேதி இரவு 12 மணி முதல் 1 வாரம் வரை ஆர்ப்பாட்டமோ, பொதுக் கூட்டமோ நடத்த கூடாது என்று அரசாங்கம் தடைவிதித்தது. ஆனால் மக்களின் உணர்ச்சிப் பிரவாகமிக்க பெரு வெள்ளத்தைக் கண்டு பயந்த ஆட்சியாளர்கள் கடைசி நிமிடத்தில் தடைவிதிப்பை நீக்கினர். ஆர்ப்பாட்டத்திற்கு முதலில் தலைநகர் திருவனந்தபுர வீதிகளில் பெரும் ஊர்வலமாக வந்தனர்.

சட்டமன்றத்திற்குள்ளும் வெளியேயும் ஏராளமான போலீஸ் குவிக்கப்பட்டிருப்பதை எதிர்த்து, "வெட்கம் வெட்கம்" என்று எதிர்க்கட்சி உறுப்பினர்கள் சட்டமன்றத்திற்குள் கண்டனம் முழங்கினர்.

சட்டமன்றத்திற்கு முன் ஆர்ப்பாட்டம் முடிந்த பிறகு பொதுக் கூட்டம் நடைபெற்றது. அதில் தோழர் இ எம் எஸ் நம்பூதிரிபாடும், எதிர்க் கட்சிகளைச் சேர்ந்த மற்ற தலைவர்களும் பேசினர்.

### கிருஷ்ணமேனனுக்கு அஞ்சலி

கேரள சட்டமன்றக் கூட்டம் துவங்கியதும், கிருஷ்ணமேனன்மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கப்பட்டது, உறுப்பினர்கள் அனைவரும் எழுந்து நின்று அஞ்சலி செலுத்தினர்.

இரங்கல் தெரிவித்த பின்பு பிற அலுவல்கள் எதையும் கவனிக்காமல் அன்றைய கூட்டம் ஒத்திபோடப்பட்டது.

---

### வலது கம்யூ. கட்சி தலைவர்
# ராஜேஸ்வரராவின் அரசியல் தமாஷ்!

சண்டிகார், அக். 9—

காங்கிரசுக் கட்சிக்கு அளிக்கும் ஆதரவில் எவ்வித மாறுதலும் இருக்கப் போவதில்லை என வலது கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் திரு. ராஜேஸ்வரராவ் அழுத்தம் திருத்தமாகக்கூறுகிறார்.

### ஒற்றுமையும் போராட்டமும்

மேலும், காங்கிரசுக் கட்சி நாட்டின் பொருளாதார உயர்வுக்காகவும், சுயபல வளர்ச்சிக்காகவும், ஏகாதிபத்திய எதிர்ப்போடும் செயல்படுகிறது. அது "தேசிய பூர்ஷுவா" க்களின் கட்சி, எனவே வலது கம்யூனிஸ்ட் கட்சி "ஒற்றுமை, போராட்டம்" என்னும் கொள்கையையே காங்கிரசுக் கட்சியைப்பொறுத்த வரையில் கடைப்பிடிக்கும் என்றும் சண்டிகாரில்நிருபர்களிடையே மேற்கண்டவாறு கூறினர்.

### ராவின் அடிப்படை

இடதுசாரி, ஜனநாயக முற்போக்கு கொள்கைகளை பிரதிநிதித்துவப்படுத்தும்ஒரு புதிய அரசாங்கம் இன்று நாடு சந்திக்கும் அடிப்படை பிரச்சினைகளை தீர்க்க முடியும் என்று அவர் கூறினர். (கேரள மாடலில் மத்திய அமைச்சரவையிலும் இடம் பிடிக்க அடிப்படை போடுகிறார்)

மேலும், அரசாங்கத்தின் மக்கள் விரோதக் கொள்கைகளை கைவிடக் கோரி வெகுஜன இயக்கங்களை நடத்துவதன் மூலம் அரசாங்கத்திடமிருந்து சில நிவாரணங்களை மக்களுக்கு வாங்கித் தரமுடியும் என்றும் தெரிவித்தார் ராஜேஸ்வரராவ்.

பிற்போக்கு சக்திகளை தோற்கடிக்க காங்கிரசுக் கட்சிக்கு வலது கம்யூனிஸ்ட் கட்சி ஆதரவளிப்பது அவசியம் என்றும் அவர் கூறினர்.

### திருத்தல்வாதத்தின் விளைவு

மேலும், தேர்தல் உடன்பாடு பற்றிப் பேசும்போது, எந்தவொரு தனிக்கட்சியும் முழுமெஜாரிட்டி பெற முடியாது என்றும் வலது கம்யூனிஸ்ட் கட்சியின் தயவில்லாமல் போட்டியிட்டால் காங்கிரசுக் கட்சியின் வெற்றி எங்குமிருக்காது என்றும் அவர் கூறினர்.

சிக்கிம் பிரச்சினையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி நாட்டுக்கும ஜனநாயக சக்திகளுக்கும் விரோதமாகப் போய்விட்டதாம், கூறுகிறார் ராஜேஸ்வரராவ். பக்கத்து நாடுகளின் உரிமையை மதிப்பது நாட்டுக்கும், ஜனநாயகத்துக்கும் விரோதமா? திருத்தல்வாதம் தேசிய வெறிக்கும்கொண்டு செல்லும்என்பது எவ்வளவு சரியாகிவிட்டது? பாவம், வலது கம்யூனிஸ்ட்கள்.

---

### ஊட்டியில் ஆர்ப்பாட்டம்
## விலைவாசி— ஊதிய முடக்கத்துக்கு கண்டனம்

ஊட்டி, அக். 10—

இங்கு கடந்த 6-ந் தேதியன்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, சி ஐ டி யூ, இந்திய மாணவர் சங்கம், சோஷலிஸ்ட் வாலிபர் முன்னணி ஆகிய ஸ்தாபனங்களின் சார்பில் பெரும் ஆர்ப்பாட்டம் ஒன்று நடந்தது.

பதுக்கலை வெளிக் கொண்டு வருதல், சர்வ கட்சியினரிடம் மாவட்டக் கலெக்டர் ஒப்புக்கொண்டபடி குடும்பக் கார்டுகளுக்கு அரிசி வழங்குதல், 500 குடும்பங்களுக்கு ஒரு நியாய விலைக் கடை திறத்தல், ஊதிய முடக்கச் சட்டத்தை வாபஸ் பெறுதல் ஆகிய கோரிக்கைகளை வற்புறுத்தி இந்த ஆர்ப்பாட்டம் நடந்தது.

பின்னர் நடந்தபொதுக் கூட்டத்தில் தோழர்கள் பெள்ளாகவுடர், ஆர் எஸ் ரங்கசாமி, சி பி கோபிநாத், மாணவர் தலைவர் என் ரவிசங்கர், செல்லமுத்து, கே ராஜன் ஆகியோர் பேசினர். வி கே கிருஷ்ணமேனன் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கப்பட்டது.

---

### பாலப்பட்டியில்
## விவசாய தொழிலாளர் கூலி உயர்வு வெற்றி விழா

நாமக்கல், அக். 10—

பாலப்பட்டியில், விவசாய தொழிலாளர் கூலி உயர்வு வெற்றி விழாப் பொதுக கூட்டம் கடந்த 5-ந் தேதி நடந்தது.

இக்கூட்டத்தில் வழக்கறிஞர் சி. ஆர், பழனிச்சாமி, என். சீதாராமன் ஆகியோர் கலந்து கொண்டு உரையாற்றினர்.

இப்பகுதி விவசாயத் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு இயக்கம் நடத்தியதன் விளைவாக, ஆண்களுக்கு ரூ. 3-லிருந்து ரூ. 4-ஆகவும், பெண்களுக்குரூ1-50லிருந்து ரூ. 2ஆகவும், ஏர்க்கூலி ரூ 6லிருந்து ரூ 9 ஆகவும் உயர்த்திப் பெறுகின்றனர்.

---

### வேலைநிறுத்தம் செய்து
## கூலி உயர்வு பெற்றனர்

உடுமலை, அக். 11—

குரல்குட்டை என்ற ஊரில் 300 பெண்களும், 200 ஆண்களுமாக 500க்கு மேற்பட்ட விவசாயத் தொழிலாளர்கள் ஒன்றுபட்ட வேலைநிறுத்தப் போராட்டத்தில் இறங்கியதைத் தொடர்ந்து கூலி உயர்வு பெற்றனர்.

இந்த வேலைநிறுத்தம் கடந்த 8ந் தேதி நடந்தது, அதையொட்டி விவசாயத் தொழிலாளர் தலைவர்களுக்கும், மிராசுதார்களுக்குமிடையே நடந்த பேச்சுவார்த்தையில ஆண்களுக்கு ரூ 5லிருந்து ரூ 6ஆகவும் பெண்களுக்கு ரூ 3லிருந்து ரூ 3-50ஆகவும் உயர்த்தப்பட்டது.

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு மதுரை, 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே முத்தையா.